பிஸ்மில்லாஹி.






# பதானந்த மாலிகை.



இஃது
பிதாயதுல், இதாயா, வெனும்
நேர்வழியின் ஆரம்பம்
முதலிய நூற்களின்
ஆசிரியரும்,
மதுரைத் தமிழ்ச் சங்கவித்வானுமாகிய கீழக்கரை,

ஸ்ரீமாந்-ஹாபிலு, செ. மு. செய்யிது முகம்மது
ஆலிம்புலவரவர்களால்

இயற்றப்பட்டு

சென்னை :
எஸ். மூர்த்தி அண்டு கம்பெனியில்
பதிப்பிக்கப்பட்டது

இரண்டாம் பதிப்பு.
ஹிஜ்ரி 1335-ரபீஉல் ஆகிர்-பிறை30குச் சரியான
கி. பி. 23-2-17 வெள்ளிக்கிழமை.

இதின் விலை.] காப்பிரைட் [அணா 3.

## கீர்த்தனை மாலிகை.

கீர்த்தனைகளில மிகவுஞ் சிறந்த இந்தப்புத்தகமானது சமீபகாலத்தில் 3-வது முறை பதிப்பிக்கப்பட்டு அதுவும் விற்பனையாகி அதி விரைவாய் முடிந்துவிடும் போலிருக்கிறது. இது கீழக்கரை, ஸ்ரீமாந், செ, மு. செய்யிது முகம்மது ஆலிம்புலவரவர்களால் பாடப்பட்டது. இதில், ரசூல் ஸல்லல்லாகு அலைகி வஸல்லம வர்கண்மீதும், சாபிகீ, இமாம் அவர்கள, குத்புல்அக்தாபு, முகியித்தீன் ஆண்டவரவர்கள், சாதுல்கமீது, ஆண்டவரவர்கள், சதக்கத்துல்லா அப்பாஅவர்கள் மீதிலும் இயற்றப்பட்ட கீர்த்தனைகள் அமைந்திருக்கின்றன. இதிலுள்ள வொவ்வொரு கீர்த்தனையும், மகாவுன்னதமான இராகத்துடன் பக்திரசம் நிரம்பியதாகப் பாடப்பட்டது. மனவுருக்கத்துடன் பெரியோர்கள் சந்நிதியில் வேண்டிக்கொளவதற்கும் ஆழ்ந்த கவலையை அகற்றி ஆனந்தக்கடலில் அமிழ்ந்துவதற்கு மிகவுமஉற்றதுணை யாகவுள்ளது

கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது விலை அணா -3.

நூற்றுக்கணக்கில் வாங்கிக்கொள்வதானால் பிரத்தியேகமாய் விலை பேசிக்கொள்ளப்படும்.

## முகுதஸருல் ஈமான், வணஸீஹறதுல் இஸ்லாம்.

மிகவும் பிரயோஜனமுடைய இந்தச் சிறிய அறபு தமிழ் கிதாபானது; அதிராம் பட்டணம் கொ. செய்கு அப்துல் காதிறு ஆலிம் சாகிபு அவர்களாலியற்றப்பட்ட கிதாபுகளிலொன்று. இதில் இஸ்லாமார்க்கத்தினுடைய ஹுக்கும்களைச் “சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்” என்னும் அழகு பற்றி, வாசிப்பவர்களுடைய மனதில் ஆழமாய்ப்பதியும்படி மிகவுந் தெளிவாய்விளக்கிக்காட்டப்பட்டிருப்பதோடு, இருதையம் பரிசுத்தமாவதற்குரிய அநேக நல்லுபதேசங்களும அடங்கியிருக்கின்றன. விலை அணா 2.

## முனாஜாதுல் அஸ்னா, மஅ, தர்ஜுமதி, அஸ்மா இல்ஹுஸ்னா

இதில் அல்லாகுக ஆலாவுக்குச் சரியான ஹதீதுகளின்படி தரிபடுத்தப்பட்ட அஸ்மா உல் ஹுஸ்னா வென்னும் 99 திருநாமங்களையும் தப்சீர்களில் எழுதப்பட்ட முறைப்படி அறபு (லப்லு) களை முறையாகவைத்தும், அது அதற்குரிய தமிழ் தர்ஜுமாக்களையவைகளுக்கு மத்தியிற் சேர்த்தும் பாடப்பட்ட முனாஜாத்து 1-ம் அலிபு முதல், ஏ, வரையிலுமுள்ள 29 எழுத்துக்களையு முறையே துவக்கங்களில்வைத்துப்பாடப்பட்ட முனாஜாத்து 1-ம் அடங்கியிருக்கின்றன. இதையிருதைய விசுவாசத்துடனே ஓதுகிறவர்கள் அல்லாகுக ஆலாவிடத்தில தங்களுடைய ஹாஜத்துக்களைப் பரிபூரணமாய் நிறைவேறப் பெற்றுக்கொள்வதோடு, அஸ்மாஉல ஹுஸ்னாவுடைய தமிழ் அர்த்தங்களையும் விளங்கிக்கொள்வார்கள். இது கீழக்கரை செ. மு. செய்யிது முகம்மது ஆலிம்புலவர் அவர்களா லியற்றப்பட்டது. அறபு தமிழ் எழுத்தா லச்சிடப்பட்டிருக்கின்றது. மிகவும் சகாயம் விலை அணா. ஒன்று தான் 0 1 0.

1

பிஸ்மில்லாகி.









# பதானந்த மாலிகை.

## தற்சிறப்புப்பாயிரம்.

### கட்டளைக்கலித்துறை.

பூவா ருலகும் புனைக்கும்வல் லோனைப் புகழ்ந்துநின்று
மாவா ருயர்சல வாத்தால் முகம்மதை வாழ்த்தியபின்
நாவா ருசித பதானந்த மாலிகை நன்கியம்பப்
பாவா ரரும்பதந் தேராத நெஞ்சம் பதைக்கின்றதே.



அல்லாசுப்ஹானகு தஆலாவின் மீது

துன்யா ஸாரீ-யென்ற இந்துஸ்தான்மெட்டு

1. பல்லவி.

இனியா கிலுமென் னிருண்மத மறுத்தே
யிலங்குங்கருணைமழை பெய்தருணுதா

அநுபல்லவி.

முனியாவமரோர் முழுமுதலெனுமோர்
மூவுலகாள் பெரு மானேயென் கோனே (இனி)

சரணங்கள்.

மா தவநிதியே மகிழ்தருமதியே
வரமருள் தரவரும் வான்பரகதியே

பாதக முழுவதும் பரிவுட னகற்றும்
பரனெனையாட்கொளுந் தரமிருந்தோனே

பதமே சதமே நிதவந் தனமே
யதமே யணுகா வதிமா தவமே (இனி)

அருமறைக் குருவே யருணிறை தருவே
அகுதியர்க்காதர வாகிய திருவே
சருவ தயாபர தனிமுதற் பொருளே
சாருமடியவர்பால் தரித்திடுமருளே

ததியே யிதுவே தயைசெய் திடவே
மதியே விதியே வதிமா தவமே (இனி)

சிந்தையின் றெளிவே திகழ்தரு மொளிவே
திருமறை யவர்புகழ் செய்திடுஞ் சுளிவே
சிந்தையில்விளைவுறும் செய்யிதழுகம்மதைத்
தினமுன தடைக்கலஞ் சேர்த்திடுங் கருவே

தினமே தனமே திகழ்சம் பனமே
இனமே முனமே வதிமா தவமே. (இனி)

---

2. பல்லவி.

யோகஞ் செய்திடவா
ஒரு தனி முதலே யஞ்சி நீ (யோக)

அநுபல்லவி.

உலவி-புகழ்க்-குலவி-யுயர்
தலவி-மிகு-நலவியே (யோக)

சரணங்கள்.

மானே புவி மாயமே-மருவினுலத பாயமே-சகி

வணங்கி-மன-திணங்கி-பவங்
குணங்கி-மிகச்-சுணங்கியே (யோ)

காணும்பொருள் யாவுமே-கணத்திலே யழிந்தேத்மே-
கருதி-மனம்-பொருதி-விழும் [கண்ணல்
உறுதி-யிதே-யறுதியே (யோக)

மாயாப்பிர பஞ்சமே-மருவிடாமலுன் னெஞ்சமே-பெரு
மறந்து-துய-ரிறந்து-வுள்ளந்
திறந்து-மிகச்-சிறந்து நீ (யோக)

சீரார்புகழ் மாமது-செய்யிதுமு கம்மது-வுயர்
சேடி-புகழ்-பாடி-மனந்
தேடி-விரைந்-தோடியே. (யோக)

---

ஆசைமன்னவா வென்றமெட்டு.

3. பல்லவி.

ஆசைநெஞ்சமே-பொல்லா-ஆசைநெஞ்சமே-பயந்
தஞ்சிடுவாயென்றுந் துஞ்சிடுவோமென்றே (ஆசை)

அநுபல்லவி.

ஆசைபாசந்தன்னை நேசமதாகவே
மோசமிகும்பிரை யாசையெடுத்தபே (ராசை)

சரணங்கள்.

என்னசெய்குவாய்—பின்பு—என்னசெய்குவாய்—அன்று
எவரி—டஞ்சென்று தவம்புரிகுவாய் (என்ன)
மன்னுயிர்கொல்ல மறலிசெல்லவே
உன்னுயிர்தனக் குதவியார்சொல்லு (ஆசை)

வருந்தலாகுமோ—கெஞ்சி—வருந்தலாகுமோ—செத்தால்
மருவு-மெய்யுயிர் வரவும்போகுமோ (வருந்)
பொருந்துமுயிரெம் மருந்தினினிது
மிருந்திடாதெனத் தெரிந்துமேவிய (ஆசை)

துன்பந்திருமோ – மனத் – துன்பந்தீருமோ—உடற்
சுழன்று-குழியிலழுகமாறுமோ (துன்பம்)

என்புதோலுட விறந்துபோவது
தென்புதானெனத் தெளிந்துமீறிய (ஆசை)

காதல்பூணுவாய் - இங்கே - காதல்பூணுவாய் - படுங்
கஷ்ட-மெல்லாம்பர னிஷ்டமதேயென்று (காத)

வாதுவல்வினை யேதுமுன்னக
மீதுநீவியெப் போது மேவிய (ஆசை)

---

## நபிஸல்லல்லாகு அலைகிவஸல்லம் அவர்கண்மீது

### S. கட்டளைக்கலித்துறை.

சங்கதி மேவு மதிஞ வளர்தரு வேச்துவே
தங்க மருவிய வுத்தம ரேசக லாகமமே
பொங்கிய நற்கதிர் பொற்ருள் கமலமுற் றீர்நபிகள்
வங்கிச நாயக மேகபீ பானமு ஹம்மதுமே.

### 4. S. பதம் பல்லவி.

தருணத்திலென் முன் வந்து காப்பேனெனும்வலக்கை
தருவதுகடனுமே-யெனும்வலக்கை
தருவது திடனுமே

அநுபல்லவி.

ஒருமுத்திலுதித்திந்த வுலகமற்று மெவையும்
உலகமற் றுமெவையும்
ஒக்கவொளிவாய்நின்ற-மக்கமகுமூதரே (தரு)

சரணங்கள்.

வாயு நாவும்வரண்டு மனமெல்லாமெலிந்திட
மனுமுறையுள்ளோர் கண்ணீர்மழையெனச்சொரிந்திட

---

S இவ்வடையாளமிட்ட செய்யுட்களெல்லாம் இந்நூலாசிரியரின் முன்னோராகிய மகாவித்வான் கருத்தசதக்கு தம்பிப் புலவரவர்களா லியற்றப்பட்டன.

சேயுந்துணைவர்களுஞ் செல்வமும்பிரிந்திட
செய்தபழிபாதகச் செயல்பலதெரிந்திட
சிலிர்க்கவுடனரம்பு-வலிக்கமனதுவெகு
கலக்கமுற விறைவன்-மலக்குல்மவுத்துவருந் (தரு)

விழியிரண்டுஞ்சிவந்து வெகுகோபமாயடுத்து
மேனுளகன்றவுயிர் மறுத்துடலில்விடுத்து
மொழியுமொழிக்குமறு மொழிகொடென்றேதடுத்து
முனிந்து சுக்குமாரென்னு மூரித்தண்டமெடுத்து
முப்புவி யுங்குலுங்க-செப்பிய முன்கர்நகீர்
வெப்பமுடன்வெகுண்ட-டிப்பவடர்ந்துவருந் (தரு)

மிகுதிநாளில்மஹ்ஷர் வெளியிற்பொழுது தாக்கி
வேகாமன்முன்செய்பாவ வினைத்தொடரெல்லாம்நீக்கி
நியதிதராசினன்மைத் தட்டினிரம்பத்தூக்கி
ரட்சித்தல் ஹம்துக்கொடி நீழல்தனிலுமாக்கி
நீலக்கரியரோமக்-காலுக்குநேர்மையான
வேலில்கூர்மைமுஸ்தகீம்-பாலத்திடைநடக்குந் (தரு)

மருமலர்ச்சோலை சூழு மதின நகரின்வாழ்வே
மாதவ்ரப்துல்லாகண் மகவென்றுதித்தகோவே
தருமசற்குணமேரே சகலோர்க்குங்கற்பகாவே
சதுமறையோர்புகழும் செய்யிதகுமதுவே
தன்னந்தனியேனின்று-அன்னம்பாறுகின்ற
சின்னஞ்சிறியேன்சதக்-கென்னும்பயலுக்கிந்த (தரு)

---

மன்றல் மேவுபரன் குன்றில் என்றமெட்டு.

5. கண்ணிகள்.

மன்றல் மேவுமெழிற் குன்றிவாழுமுடன்
மாளுமே-செத்து-வீழுமே
மனந்-தாழுமே- கெட்-

மணத்தை வீசுமுன்றன் பிணத்தைப்பார்க்கவந்து
சூழுமே-துயர்-நீளுமே (மண்)

துடிய டங்கியரை நொடியிலேயுடல
மடியுமே-கால-முடியுமே
விழுந்-திடியுமே- கண்ணில்
தோற்ற மாமெவையு மாற்றமாகவந்து
விடியுமே-நெஞ்ச-முடையுமே (மன்)

மாய மானவுயிர் காய நீங்குமந்தக்
காலமே-அலங்-கோலமே
என்ன-சீலமே- நரி
வழுத்து நாய்களுண்ணப் புழுத்துநாறு மிந்தத்
தூலமே-ஜக-ஜாலமே- (மன்)

வழியி லாதசிறு குளியிலுன்றனுடல்
வதைக்கவே-நெஞ்சம்-பதைக்கவே
மண்ணில்-புதைக்கவே- கரும்
மங்குல் போன்முளங்கு முன்கருன்வணகீ
ருதைக்கவே-அங்கஞ்-சிதைக்கவே (மன்)

ஆல காலநிகர் காலமாமனுஷர்
காளையே-கொதி-மூளையே
நர-ரூளையே- யிட்டு
அந்த ரத்திலலே யுந்தரத்தை நினை
யேழையே-இந்த-வேளையே (மன்)

அழுது நாவுலர்ந்து முழுதுஞ் செய்பவத்தை
அங்கமே-சொல்லித்-தங்குமே
பகி-ரங்கமே- இங்கே
அழுது வேளையந்துந் தொழுது வந்தோர்ஜெய
சிங்கமே-பசுந்-தங்கமே (மன்)

பால மீதிலலங் கோலமாய் விழுந்து
படுப்பையே-கண்ணீர்-வடிப்பையே
துடி-துடிப்பையே- யெரி
பாழுமா நரகில் விழவேகரத்தைக்
கடிப்பையே-தலையி-லடிப்பையே (மன்)

புன்மை யாகுமுன்றன் தின்மையாவு நிறை
தூக்கமே-யுன-தாக்கமே
என்ன-தாக்கமே- கனவ்
புந்தி மேவியேசி-வந்த கண்ணிரண்டும்
வீக்கமே-மன-மேக்கமே (மன்)

மதியி லாதுபெருஞ் சதையினுண்மை கொண்டு
திரிகிருய்-பவம்-புரிகிருய்
நெஞ்ச-மெரிகிருய்- புவி
மாய்கை யாகுநிழற் சாய்கை தங்குமெனத்
தெரிகிருய்-மனம்-விரிகிருய் (மன்)

திமிர பானுவெனு மமரர்கோனபிகள்
நாதரை-மகு-மூதரை
சது-வேதரை- புகழ்
செய்யி துமுகம்ம துய்யுமாறருள்ச
மேதரை-திருத்-தூதரை (மன்)

தஞ்ச மென்றுபய கஞ்சப் பாததுதி
காணுவாய்-தொண்டு-பூணுவாய்
மனந்-தோணுவாய்- பலர்
சாபமே வவரும் பாவமீது மனங்
கோணுவாய்-மிக-நாணுவாய். (மன்)

---

மங்கையர் நாயகமானே என்றமெட்டு.

## 6. பல்லவி.

தந்தையர் நாயக நாதா-வென்றன்
சஞ்சலந் தீர்க்கலா காதா

### அநுபல்லவி.

சந்ததம்பரவுஞ் சுந்தரநபியே
சல்லாப-வுல்லாச-வல்லான் ரசூலெனும் (தந்)

சரணங்கள்

முன்மறைபுகழ்மகுழ தா-வுயர்
மூவுல கவர்தொழும் பாதா
முகிலிடுங்கவிகைமு கம்மதுநபியே
மூவாத-நாவாருந்-தேவே-ரசூலெனுக் (தங்)

பணிபணிந்துரை தரும்போதா- மிகும்
பரகதிதருநவநீதா
பங்கயமலரும் பதிதிருமதின
பாதார-வாதார-மேதாரு-வேதரே. (தங்)

பிறர்மனை விளையுமென்னுவி-யதின்
பேதமை தவிர்த்திடு மேவி
பிரசமதிகலும் பேரருண்முகிலே
பெய்யா தி-நையாது-செய்யித்-முகம்மதென். (தங்)

---

இராகம்-கல்யாணி- தாளம்-ஆதி.

## 7. பல்லவி.

தாமதிக்காமல் கூறடி-தயை-சேரடி (தாம)

அநுபல்லவி—சரணங்கள்.

சோமசுந்தரநிகர் நேமசுந்தரமிகுந்
தூபிக்கலாபமயில் ரூபிக்கலாவமிர்த
துஞ்சிடும்விழிபாவாய்-சுகிர்த
ரஞ்சிதமொழி பூவாய்-நபியிரு
கஞ்சமெல்லடிமேவாய்-அநுதின
மிஞ்சிடுதுயர்நீவாய்-மிகு
சோபன மாவன மேவிய மாஹுறுந்
தோமற மாமன மேவகு ணாகர சாகரர்
துன்பந் துயர்பவ தோசமகன்றிடத்
தம்பந் தம்பந் தரவவர் புறமெனச்

சாட்டி சலீலமலர்
சூட்டி ததியீதெனக்
காட்டி தவிரகித
மோட்டி தகுஞ்சீமாட்டிச்

சுரும்பு ருசிதர விரும்பி யிசைபயில்
திருந்து புஜபலர் பொருந்து நவநிதி
தெண்டந் தெண்டந் தெண்டந் திருப்பத
தொண்டன் தொண்டன் தொண்டன் றுகளற
துஷ்டர்க ளிஷ்டம தேபர நிஷ்டையி
னஷ்டம தாமுறுங் கஷ்டம தாமெனத்
துறவித் துறையிற் றுதையச் சுகிர்தச் சுகமுற

தோதறு மாதவ ருந்துந் துங்கெனுந்
தூதெனு மாமகு மூதவர் சீர்தர

துஞ்சாத நஞ்சார கஞ்சோர வுஞ்சோக
தென்சார வுஞ்சீர கஞ்சோதியைக்காண
சேயனென நாடுபுகல் செய்யிதுமு கம்மதுவின்
செந்தமிழ்க் கிரங்கியுன்றன் சிந்தைமகிழ்ந்து புகழ்ந்து. (தா)

## திருப்புகழ் வர்ணமெட்டு.

### 8. சந்தக்குழிப்பு.

தனதன தந்தத் தனதானா தன
தனதன தந்தத் தனதானா தன
தனதன தந்தத் தனதானா தன தனதானா.

திமிர்மத மிஞ்சித் திரியாதே, யிறை
திருவொளி நெஞ்சிற் றெரியாதே, பவஞ்
சிதைவென வஞ்சிப் புரியாதே, வயி—றெரியாதே.
சினமிக மிஞ்சித் துடியாதே, துய
சிதமிகு மின்சொற் றடியாதே, யனு
தினமிகு வஞ்சப் படியாதே, தின—மிடையாதே.
அமிழ்தென நஞ்சைக் குடியாதே, வளர்
அனுபவ முஞ்சற் றிடையாதே, யிறை
அருமறை யின்சொற் கிடையாதே, மன—முடையாதே.

அறிவும யங்கிக் குளையாதே, பெரும்
அறநெறி மங்கிப் பிழையாதே, பிறர்
அகமதில் தங்கிக் களையாதே, பொருள்—விளையாதே.

சிமிழ் நிகர் மங்கைக் கயலாலே, படுந்
திமிருமு னங்கப் புயலாலே, கெடுந்
திமிரம மிழ்ந்தத் துயிலாலே, களிப்—படையாதே.

சிறுவர்தஞ் சங்கத் தயலாதே, கதிர்
சிகரமி லங்கத் துயிலாதே, மிகு
சிறமைவி ளங்கப் பயிலாதே, வுரை—யகலாதே.

கமலம லர்ந்தத் திருவாவி, விரை
கமழ்தரு கந்தத் தருமேவி, மது
கரவின மூந்தத் தினமேவி, யுயர்—மதிஞவாழ்.

ககனமு யர்ந்தத் திருமேவி, பத
கமலமி ரண்டைத் தொழுகூவி, பவ
கலகமொ துங்கத் தினநீவி, தரு—மிறகூலே.

---

## 9. பல்லவி.

மானேமன் னபிமுன்னில் வாராயா? சகி-மானே
வந்துமகிழ் கொண்டுபுகழ் கூறுயா?

### அநுபல்லவி.

ஆழித் துரும்பெனவே அங்குமிங்குமோடுகிருய்
அந்தரம்பு ரந்தநாத ரகுமதரைத் தேடிநிதம் (மா)

### சரணங்கள்.

வாணண்முழுதும் விணைய்ப்-போனேமே-நந்தம்-வாணண்
வம்புசெய்தோ ரின்பமுறக் காணேமே
வாதைக்குடம்பெடுத்தோர் வாழ்வதரிதாகுமன்றோ?
வந்தனஞ் செய்யநாதர் மன்னரகுமதைத்தேடி (மா)

காணும்பொருண்முழுதும் வீணுமே-கண்ணல்-காணு
கந்தகபிதந்திருத்தாள் பூணுமே
கந்தரங்கவிந்தமேதை சுந்தரமுகம்மதுவாம்
காதமணமோதுந்தூய காதியகு மதைத்தேடி (மா)

தீராதபாவ வினை தீர்ப்பாரே-தினந்-தீராத
சிந்தை மகிழ்-தந்துகதி-சேர்ப்பாரே
தீதாம் படுகுளியிற் சிக்கிமன நோகாமல்
செய்யமலர் தந்துவாழ்த்த செய்யிதகுமதைத்தேடி (மா)

---

## 10. பல்லவி.

அகிலமிசையருள் கண்கடை
யணைவினுலே வந்தேன்
அகிதமென்ற னகத்தினுற ஆவிநொந்து வெந்தேன்.

### அநுபல்லவி.

ஆமினுபாலா அன்பாருமன் னூலா-புகழ்
தாமசெங்கோலா வருள் தருவீர்மன்மேலா (அகில)

### சரணங்கள்.

வளருமதி வகுத்த வெங்கள் மாமதினக்கோனே?
வாடி நான் தேடி-வந்தேனுமை நாடி புகழ்
பாடவே கோடி நித்தம் பதிவாய்க்கொண்டாடி (அகில)

வனசரன்கை மான்பிணையாய் வந்தமகு மூதா?
மாசிலா வேதா மங்காதமெய்த் தூலா, வுயர்
வாசசயேதா மிக்க வருக மலர்ப்பாதா (அகில)

அடியவர்க் கருளும் செய்யி தகுமதுற்ற சூலே
ஆதிபாலேறி யன்பாயுறை கூறி, துய்ய
வாசிமீதேறி இங்கே வந்தவுபகாரி (அகில)

---

## 11. பல்லவி.

சுந்தரவடிவான சுகமருண் மகுமூதர்
சோபன-ரிடஞ்சேர்வாயே, மாமோகமானேன்
சோபன-ரிடஞ் சேர்வாயே, மாமோகமானேன்

### அநுபல்லவி.

கந்தரமேறி கலந்துறைகூறி
வந்தமன்னரைத்தேடி மாமோகமானேன்
வந்தமன்னரைத்தேடி மாமோகமானேன் (சுந்)

### சரணங்கள்

பாதகரெவரும் பற்றிக்கொள்ளாத
பதமலர் தனைநாடி மாமோகமானேன்
பதமலர் தனைநாடி மாமோகமானேன் (சுந்)
வானகமதியை வகுத்தநற்பதியை
நானகத்துறவாடி மாமோகமானேன்
நானகத்துறவாடி மாமோகமானேன் (சுந்)
செய்யிது முகம்மது செந்தமிழ்ப் பதஞ்சூடும்
மெய்யருள் தனைநாடி மாமோகமானேன்
மெய்யருள் தனைநாடி மாமோகமானேன். (சுந்)

## 12. ருத.

கூட்டுமறை நேசர், நேர்காட்டு மின்பராசர்-வரங்
கேட்டநேருல்லாசர், கிலேசந்தீர் சந்தோசர் உயர்
குணமானவாசர் குயிர்
குலமுற்றிலும் நிலையற்றிட
தலைப்பட்ட தாசர்
கொண்டேன் கொண்டேன் உம்பாத
குணமருளென் மீதே சோ
மான ருளுந்தாதே குணங் கொண்ட மகுமூதே-பவ
மனதிற்கொள்ளாதே பத
மலர்ப்பஞ்சணை " தனைக்கெஞ்சியே இனித்தஞ்சமானேன்
மகிழ்வுடன்புகழ் மிகவே யும்பதம் வழுத்தவு மானேன் (கூட்)

## 13. பல்லவி.

ஆவலாகி நோக்கே-னணைத் தருள் தாரும்
பாவியென்று மெனை நீர்பார்த்தருளும்

### அநுபல்லவி.

காவல் செய்ய லாகாதோ ஜகநாதா (ஆவ)

### சரணம்

அமரவர் பரவிடாத அருஷிடத் தமருங்கோனே
அநுதின மனது வாடி யவதியும் படுகின்றேனே
கமரவர் குலங்கள் மாளக்-கரமணை விடுஞ் சீமானே
கதிதரு மதினமான கன நகராள் பூமானே.

ஆவிசுழன்றோடு தையா
தேவையணுகாத துய்யா
மேவியெனைச் சேருமையா
வேண்டுமருண்மேவுங் கையா

அந்தரர் பணிந்து புகழ் செந்திரு மருவும் பாதா
ஆதி மறையோது மகு மூதுகபி யான நீதா
ஆகா வடிமை யோக மனதுற (ஆவ)

ஓச்சலியா நேமிச்சேத்து என்ற தெலுங்கு மெட்டு.

## 14. பல்லவி.

ஆசையினு-லாவிசோர்ந்து மோசமானேனே

### அநுபல்லவி.

நாசத்தொழில் நண்ணிவீசி நலியலானேனே (ஆசை)

### சரணங்கள்.

வண்ணக்காடு தன்னை நேசி வலியச் சிக்கினேன்
நன்மைமகு-மூலைதத்தேடி நலியலானேனே (ஆசை)
கானவன்கை மானை மீட்டுங் கருணை வாரியே
நாளுமகு மூதைத்தேடி நலியலானேனே (ஆசை)

பூதலத்திற் பாதந்தோயாப் புதுமை வேதரே.
நாதர்மகு மூதைத்தேடி நலியலானேனே (ஆசை)
பந்தப்பாச மெந்தப்போதுஞ் சொந்தமானேனே
நந்தாமகு-மூலைதத்தேடி நலியலானேனே (ஆசை)

---

## 15. பல்லவி.

சரணம்-சரணம் ஜகநாதா
சதுமறை தரவரும்-நவநீதா

### அநுபல்லவி.

தருணந்-ததிவர-மருள்வேதா-ஜகமுழுவதும் புகழ் மகுமூதா (சர)

### சரணங்கள்

மஞ்சஞ்சணிகுழல் ரஞ்சிதமே
மாமயிலாமினு-தருஞ்சிதமே
தஞ்சந்தரவர-வும்பதமே
தாசர்களகமகிழ்தருநிதமே (சரணம்)

அந்தரமொளிதரும்-வளர்மதியே
அமரவர் பரவிடு-மதிபதியே
கந்தாங்குடையிடும் கனதுதியே
காதிமுலன்பியா வெனுநிதியே (சரணம்)

கந்தந்திகளொளி கமழ்தூலா
கதியுதவிடவரு மிகமேலா
சந்தந்திகழ்தரு மஇநூலா
சருவதயாபர-னிறகூலா (சரணம்)

வையகம் புகழ்தர வரும் பாதா
வசைபுகல் பவர்க்குமன்னருள் போதா
செய்யிது முகமதை தினமேதா
இலு நலவினே யருளிறைத் தூதா. (சரணம்)

---

### 16. கண்ணிகள்.

ஆதாரம் அணிதிகழ் பாதாரம்
அருளுஞ்சு காதாரம்
அகமகிழ்ந்திட மிகுபுகழ்நபி (ஆதா)

தாகாவே தவமிகுயோகாவே
தரைபுகழ் வாகாவே
தரணியாவுமுஞ் சரணம் போற்றிய (ஆதா)

ஐயாவே அருமறை துய்யாவே
அகுமதென் மெய்யாவே
அதிதவமிகுந் துதிவளர்நபி (ஆதா)

நாதாவே நறைகமழ் பாதாவே
நமருயிர்த் தாதாவே
நகுகதிர் தரு மிகுசிதநபி (ஆதா)

மாதாவே மகிழ்மகு மூதாவே
மறைசது வேதாவே
மருவுநற்கொடை தரவருநபி (ஆதா)

மாலானேன் வஞ்சகன் கைக்-கோலானேன்
வள்ளலுமக் காளானேன்
வருந்த மென்னகந் திருந்த வந்தெனக் (காதா)

பொய்யாது புகருரை செய்யாது
புகழ்மன கையாது
புகலுஞ் செய்யிது முகம்மதுக்கரு (ளாதா)

---

இமாமுனா முகம்மதுப்னு இத்ரீஸ-ஷ் ஷாபிகீ
ரஹ்மதுல்லாகி அலைகியவர்கள் மீது
மககஜவதனனே என்ற மெட்டு.

### 17. பல்லவி.

பரகதிசத மாமே யும்பாத கதிதர
சாபிகிமாமே,

அநுபல்லவி.

பதி மெய்யாசனு பவவிமோசனு
பாச-ரேவிசு வாச பூசித (பர)

சரணங்கள்.

நாதனருள்ச மேதரே யுமை
நம்பினேன்மிக வெம்பினேன் தம்பமாய் (பர)
காருலாமிசு ரூரரேவேனைக்
காவு-மேபவ நீவுமே யுந்தன் (பர)
பார்புக ழிது ரீசு செய்தவப்
பாலரே வனு கூல சீலரே (பர)
செய்யிதுமு கம்மது புகழ்
செந்தமிழ்க் கருள் தந்திடும் வந்திடும் (பர)

---

குத்புல் அக்தாபு ஸய்யிதுனா முஹ்யித்தீன் அப்துல் காதிறில் ஜைலானீ றலியல்லாகு அன்ஹு அவர்கண்மீது

18. பல்லவி.

சரணமே கிரணபதம், சரணமே கிரணபதம்
தரவருள் செய் விரொலியே

அநுபல்லவி.

தருணபே தா தவிர்தா
தாமுஹ்யித் தீனொலியே (சர)

சரணங்கள்.

நீங்கு மிக்கச் சடமெடுத்தேன்
நெஞ்சலித்தேன் சஞ்சலித்தேன்
தாங்குமொலி மார்புயர்பா
தாமுஹ்யித் தீனொலியே (சர)
தீங்கினரைப் போயடுத்தேன்
செய்யுமவ மேதொடுத்தேன்
தேங்கமழும் பூம்பொழில்ஜை
லான் முஹ்யித் தீனொலியே (சர)

கைதவத்தைப் போக்கடித்தேன்
காதலித்தேன் பேதலித்தேன்
செய்யிதுமு கம்மதுவின்
சீர்முஹ்யித் தீனெளியே (சர)

தாசரதியே ஸ்ரீராமா என்றமெட்டு

பல்லவி.

மூசித வானே ஸ்ரீமானே? முஹியியித்தீனே? (மூசி)

அநுபல்லவி, சரணங்கள்.

வாசியதனைப்போக்கி வருந்துமெனைக் கண்ணோக்கி
மோசமகற்றும் பூமானே முஹிய்யித்தீனே (மூசி)
ஆரமிழ் தினை யூட்டி யலகை யதனையோட்டி
அகிதமகற்றுங் கோமானே முஹிய்யித்தீனே (மூசி)
சோரருமைத்தொடர்ந்தே சூழவுண்மைபகர்ந்தே
கோரமகற்றுஞ்சீமானே முஹிய்யித்தீனே (மூசி)
ஆழும் வங்கத்தைமீட்டி அடாநம்புகழை நாட்டி
வாழ்பகு தாதெஜமானே முஹிய்யித்தீனே (மூசி)
சீராரும் புகழோது செய்யிது முகம்மது
சிந்தையிலங்கும்பாமானே முஹிய்யித்தீனே (மூசி)

செய்யிதுமுகம்மது புகாரிதங்கள் அவர்கண்மீது

(வருவாய் சுகீமுகனே என்றமெட்டு)

பல்லவி.

வருவீர்சற்குருவே? வரமருவும்புகாரி-வரு

அநுபல்லவி சரணங்கள்.

தருவாய்ச்சிறந்தபுகழ் தங்குமெந்திருநாதரே
மருவாய்வந்துதித்தோரே வளமருளும்போதரே (வரு)
அலைவாயடங்கவுரை யருளுமென்றிருவாசரே
மலையாதருளு மதி வதனவிசுவாசரே (வரு)
பார்மீதிலெவனதரும் பவத்திற்கோரளவுமுண்டோ
ஊர்வாயைமூடுதற்கே யுலைமூடிதானுண்டோ (வரு)
ஆழிவாய்த்துரும்புபோ லலையவிட்டீரேயையரே
ஊழிகாலமுழுதும் ஒக்கும்புகழ்புகாரி (வரு)
மெய்யாயுமதடியோர் விசனமடையவசமோ
செய்யிதுமுகம்மதை ஜயமருளும்புகாரி (வரு)

காயற்பட்டணம் ஹாஜுல் ஹரமைன் உமறு ஒலியுல்லா
அவர்கண் மீது.

பல்லவி.

மனமோகம் பொல்லாது அபி
மானம் வைத்தாலுடன் வரும் பெருந் தீது

அநுபல்லவி சரணங்கள்.

தந்திரமிகும் காரூன் சாபத்திற்பட்டான்
தாரணியுள்ளமிழ்ந்தித் தானுயிர் விட்டான்
மந்தா நிகராது மனையிழந்திட்டான்
மலையிலொழித்து முயிர்மடியவே கெட்டான் (மன)
வாதுசெய் பிர் அவுன் மாலர சிழந்தான்
வாருதி புகுந்தபின் வாலறி வுணர்ந்தான்
தீது செய் நம்ரூது செருப்படியுவந்தான்
தினந்தினஞ் சிரசினி லடிபட விறந்தான் (மன)
பொருது தமூதுதன் புஜவலி யிழந்தான்
பூமி யசைய வுடல் பொடிபட மடிந்தான்
பெருமை அபூஜகில் பெரும்பழிவிளைந்தான்
பேருலகி லிதுநாள் பெரும் வசைசுமந்தான் (மன)
பாதகமிகுத்தபே ராசையை நீக்கு
பரகதி பெறநிதம் பகரு நல்வாக்கு
காதக மெனவருங் கவலையைப்போக்கு
காஹிறமரோலி நற் கருணையை நோக்கு (மன)

கீழக்கரை கல்வத்து செய்யிது அப்துல் காதிறு வோலியுல்லா
அவர்கண் மீது
(மங்கள ரூப நற்றங்கமிகு மென்றமெட்டு)

கண்ணிகள்.

மங்கள மேவுநற் றுங்க மிகுங்கம
லங்களகமகிழ் பொங்கவரும்பிர
சங்கமெனும் போதா - புகழ்ஜய
சிங்கமெனுந் தாதா
கங்குலற-வெங்குமொளிர்-திங்களெனும்-கல்வத்து நாயகமே (மங்க)
ஆதரவாகவும் பாதக தீபணிந்
தேது பொருபுக ழோதுபவர்க்கொரு

போதுங்குறைவுண்டுமோ? அல்லாதொரு
தீது மவர்க்கண்டுமோ?
காதன்மகு-மூதுநபி-வேதமுரை-கல்வத்து நாயகமே. (மங்க)
தன்னந்தனித்தவ னென்னும் பரனருண்
மன்னத்தனியிருந் துன்னிமகாதவம்
துன்னும் சதா நந்தமே — உமைத்துதி
பண்ணும் பதானந்தமே
கன்னிகையர்-வின்னமுரு-தின்னுமருள்-கல்வத்து நாயகமே (மங்க)
கந்தட ருங்கரி ஐந்தும விந்துக
லந்தவிறையருள் வந்தெய்தவே வரந்
தந்தவருட் பந்தமே - நிதம்பெற
நந்தும் பவத் தொந்தமே
காளைமுகில்-வீழுமெழில்-கீழவணை-கல்வத்து நாயகமே (மங்க)
பொய்யானதேகத்தை மெய்யானதென்றெண்ணும்
பையலுமைப்புகழ் செய்யித்முகம் மதுஞ்
செய்ய மலர்க் கண்களே - கொஞ்சம் பெற
உய்யுமனப் புண்களே
கையகலா-மெய்யறிவை-ஈயு முயர்-கல்வத்து நாயகமே (மங்க)

அல் ஆரிப்பில்லாகி, கோழும்பு ஆலிம்சாகிபு என்று பெயர் விளங்கிய மௌலானா, மௌலவி, ஸாகிது, செய்யிது முகம்மது றஹ்மதுல்லாகி அலைகி அவர்கண் மீது.

எந்தஞ் சிங்காரக் கோகிலம் என்ற மெட்டு.

பல்லவி.

எந்தஞ்சிங்கார நாயகம், என்னமகிமை
எந்தஞ் சிங்கார நாயகம்

அநுபல்லவி.

கந்தரமிருந்து கவுங் காட்சியது தானிதுவோ
சொந்தமெங்குஞ் சொந்தமெங்குஞ்.
சொல் - சொல் - சொல் - சொல் - சொல்- சொல்-சொல்லினழகு
பல் - பல் - பல் - பல் - பல் - பல் - பல் - பல்லோரகத்தும்
செல் - செல் - செல் - செல் - செல் - செல்-சென்றுமருவிக்
காலமனைத்தினு மேலவராமநு
கூலம் விளைகொழும் பாஸிமெனுமுயர் (எந்த)

சரணங்கள்.

பாசம கற்றும் வங்கமோ? பசுந்தங்கமோ?
பாசம கற்றும் வங்கமோ?
மாசணுகாதமறை தேசமுழுதுமுரை
மாண்பிலங்கும் மாண்பிலங்கும்
மன் - மன் - மன் - மன் - மன் - மன் - மன்னவர்கள்யார்க்கு
முன் - முன் - முன் - முன் - முன் - முன் - முன்பின்னிலாத
மின் - மின் - மின் - மின் - மின் - மின் - மின்னார்களின்ப
மாகையகல்தவ யோகமிகுமதி
யூகிகொழும்பாலிம் சாகிபெனுமுயர் (எங்)

போற்றும் பனுவல் கொஞ்சமோ? - புகழ்துஞ்சுமோ?
போற்றும பனுவல் கொஞ்சமோ?
பூதலமெல் லாம்புரந்து போதனைபுரிந்துவந்தோர்
காதலுறுங் காதலுறுங்
கண் - கண் - கண் - கண் - கண் - கண் - கண்டோர்கள துதி
பண் - பண் - பண் - பண் - பண் - பண் - பண்ணார்களகம்
புண் - புண் - புண் - புண் - புண் - புண் - புண்ணுவதுமெய்
போலியறிவினர் பாலிலலைவதை
சாலவகல்கொழும் பாலிமெனுமுயர் (எங்)

தம்பமென்றோரின் தந்தையோ? என்னவிந்தையோ?
தம்பமென்றோரின் தந்தையோ?
வெம்பும் புவிமுழுதும் வித்தியாசாலை வைத்தோர்
மின்னிலங்கும் மின்னிலங்கும்
விண்-விண்-விண்-விண்-விண்-விண்-விண்ணவர்களோதும
பண் - பண் - பண் - பண் - பண் - பண் - பண்ணுன நாதர்
எண் - எண் - எண் - எண் - எண் - எண் - எண்ணிலடங்கா
மேதகையாகிய சாதக மாம்பர
சாதுகொழும்பாலிம் சாகிபெனுமுயர் (எங்)

தேடக்கிடையாத செல்வமே - என்னு சொல்லமே
தேடக்கிடையாத செல்வமே
சீரார் கவிதைபுகல் செய்யிது முகம்மது
சிந்தை தங்கச் சிந்தை தங்கச்

செய் - செய் - செய் - செய் - செய் - செய் - செய்யுமுதவி
மெய்-மெய்-மெய்-மெய்-மெய்-மெய்-மெய்யலதணுவும்
பொய்-பொய்-பொய்-பொய்-பொய்-பொய்-பொய்யேதுமிலாச்
சேகரமாகவே ஆகமமேவிய
யோகிகொழும்பாலிம் சாகிபெனுமுயர் (எங்)
மங்கையே பாரென்ன விநோதம் என்றமெட்டு.

கண்ணிகள்.

மங்கையேகேளென்ன விநோதம் — கண்மணியிங்க
மாதவர்விளைத்த அற்புதம்
மாசிலாதொளிருஞ்செய்ய வானவர்புகழுந்துய்ய
வாகுமிகும் கொழும்பாலிம் சாகிபுதம் மகிமையை (மங்)
கங்குலகன் றோடுதுபாராய்— தீன்பயிரெங்கும்
கம்பீரமாய்த் தோணுதுநேராய்.
கத்தனருளே நிறைந்தோர் - சுத்தவறிவாய்ச் சிறந்தோர்
காதியெனும் கொழும்பாலிம் - சாகிபுசெய் மகிமையால் (கங்)
ஆதிமறையோதத் தொடுத்தார் - உடல்பொருளோ
டாவியுமதற்கே விடுத்தார்
பூதலத்தில் யாருமொரு போதுமேடுரிந்திடாத
சாதகவினைகளெல்லா மேதகையுடனேசெய்ய (ஆதி)
தேசமுழுதென்று மலேந்தார் - தீனவருக்காய்
சென்னையிலோர் சங்கம்புனேந்தார்
பூசுரர்புகழப்பெற்று ஈசனருணேசமுற்று
சாசுவதமாகபிர சங்கமேபொழிந்துநின்று (தேச)
கந்தரம் பொழிந்ததை நேராய்—கருதுமறை
மந்திரம்பகர்ந்தனர் சீராய்
அந்தரர்புகழும்பிர பந்தமேபுனைந்ததுரை
விந்தைமிகுமதியருள் வேதமேபெரிதுஞ்சொல்லி (கங்)
வையகம்புகழ்ந்ததங்கமே—மருவுபுகழ்
செய்யிதுமுகம்மதங்கமே
பொய்யுறுமுலககன்று மெய்யறமதனைக்கொண்ட
செய்யிதுமுகம்மதெனுந் துய்யவரெனப்பணிந்து (வைய)

பல்லவி.

ஐயாவென்னசொன்னாலும் பையவேலைழ நாளுந்த
மபயமபயமென்ப-தறிவேன்- அறிவேன்—அறிவேன்

அநுபல்லவி, சரணங்கள்.

தீயாருறவிறந்து தீன்பயிர்தனைத்தந்து
சேயாயெனையுவந்த-ஜெயமே-ஜெயமே-ஜெயமே (ஐயா)
சீலமிகுங்கொழும்பு ஆலிமுங்களைநம்பும்
பாலனெனக்கருளும் பதியே-பதியே-பதியே (ஐயா)
ஆலிமெனும் பெயரா லலைவாரெத்தனைகோடி
சாலவுமைப்போலெவர் தாமோ-தாமோ-தாமோ (ஐயா)
ஆவியுடல்பொருளு மேவுமறைக்கருளு
மூவியல்புடையநன் முறையே-முறையே-முறையே(ஐயா)
சீராரும்புகழோது செய்யிதுமுகம்மது
நேராதவினையகல் நெறியே-நெறியே-நெறியே (ஐயா)

## அல்லாகுத ஆலாவிடத்தில் வேண்டிக்கொள்ளும் ஸ்தோத்திரக் கண்ணிகள்.

திருமாமறைகளோதும் ஜகநாதனே சரணம்
சிறியோர்தமைரட்சிக்கும் ஜெயசீலனே சரணம் (திரு)
அல்லும்பகலுமறை சொல்லவுதவி செய்வாய்
ஆதிமுதலாய்வந்த அற்புதனே சரணம் (திரு)
படிக்கும்படிநடக்கும் படிநிதமருள் தந்து
படியாதனபலவும் பயிற்றிவைப்பாய் சரணம் (திரு)
அன்னைபிதாமுதலோ ரருளும்வழியிற் செல்ல
முன்னேமுதலாய்நின்ற முச்சகனே சரணம் (திரு)
காலமுழுவதும்பொய் கனவிலேனுஞ் சொல்லாது
சாலவருள்புரியும் தற்பரனே சரணம் (திரு)
நல்லாருறவைக்கொண்டு பொல்லாருறவைத்தள்ள
வல்லானிதமுதவும் வளர்சோதியே சரணம் (திரு)
வீணுய்ப் பொழுது போக்கி விளையாடித்திரியாது
வாணுண்முழுதுமருள் மகராஜனே சரணம் (திரு)
ஓதிய மறையேது மொருபோது மறவாது
மாதவர் மனதுறும் வளர்சோதியே சரணம் (திரு)
ஷரஹையை கற்றிடாது சந்தோஷமாய் நடந்து
தரும நபிதமது தயவருள்வாய் சரணம் (திரு)
அன்னை பிதாவுறவோ ரனைவருமீடேற
ஆதரவாகவருள் அருள்வாரியே சரணம் (திரு)

பல்லவி.

ஜக, நாதனே? நம்பு நானெழி யேனருள்வாய் (ஜக)

அநுபல்லவி.

என்றும், நடமாடிய கொடுமாவினைத் தொடுவோரடிப் பிடமாகிய
நானெழி யேனருள்வாய் (ஜகநா)

சரணங்கள்.

மீளும்வழி தெரியாது விதங்கொண்டு
மேதினியாவும் விளைந்து மதங்கொண்டு
ஆளுமடிமையுன் னாதரவேகண்டு
மிஞ்சி-அடருங்கொடு விடமாகிய கடனீவியே திடமாகவிந்
நானெழியே னருள்வாய் (ஜகநா)

சீலமிகும்பெரியோர்கள் துதித்திடும்
தேவரமரவர் யாவரும் போற்றிடும்
காலமனைத்தனு கூலம்விளைத்திடும்
துய்ய-கருணாகர விருவாரிதி தருமாமறைக் குருவேநம்பு
நானெழி யேனருள்வாய் (ஜக, நா)

சேயுந்துணைவருஞ் செல்வமல்லாலெதுஞ்
சிந்தனை செய்யாத செய்யித் முகம்மது
தோயுந்துயர்படிந் தோய்ந்துமனமது
நித்தஞ்-சுகமாகவே ஜகமாதெனும் பகைதீர்பெரு முகிலேநம்பு
நானெழி யேனருள்வாய் (ஜக, நா)

---

கீழக்கரை கல்வத்து செய்யிது அப்துல் காதிறு வொலியுல்லா
அவர்கண்மீது சரமகவி.

வெண்பா.

முன் ஹிஜ்ரி ஆயிரத்து மூநூற்று முப்பானே
ரொன்று சவ்வால் மாதமிரு பத்திரண்டாம்-துன்னுபுகன்
காதிருவார் கீழவணை கல்வத்து செய்யிதப்துல்
காதிறொலி விண்ணடைந்தார் காண்,

ஆசிரிய விருத்தம்.

திருபரவு மொருவானத் தேவர்மனுயாவருமெய் சிதைவா
ரென்ற,ஒருபரமன்றனக்கிலகு புகழ்நான்கு முய்ர்சலவாத்
தொளிர்சலாமும், இருவுலகப் பயன்யாவு மினிதளிக்கு
நபிநாத ரினத்தார்க் கெல்வாம், அருள் பெருகப் பகரு
முயர் கல்வத்து நாதரொலி யகன்றீர்மன்னே 1.

பன்னரு மருந்தவமே புரிந்துவந்தபான்மையினல்பார்த்
தூண்தன்னல், மன்னுத வுலகமெல்லா மகிழ்ந்துமல ரடிப
ரவு மகிமையாலும், மன்னுக வுயர்புகழை விலைநிறுவு மிக
ச் சிறந்த மகருமேரும்போல், தன்னுகப் பிறர் நினைப்பா
ரொருவருண்டோ? கல்வத்தாந் தகைசான் றீரே 2.

உலகமெலா மொருகுடையி லொருங்காள முயன்றுலு
மொருகாலத்திற்,கலகமற வாண்டிடலாங் கனகபணி பூண்
டிடலாங் கணக்கில்லாத, வுலகுபுக ழுடம்பெடுத்த வுமைக்
காணப்பெறுமொருநாளுண்டோவந்தோ? குலவுபுகழ் கல்
வத்து செய்யிதப்துல் காதி றெனுங் குணசிம்மேறே 3.

வஞ்சமன மொருபோது மருவாது பொருள் தெளிவால்
மாய்கையாவுந், துஞ்சவரு முமதரிய துணைப்பதத்தைத்
தொழுவோரின் றுகளைநீக்கி, மிஞ்சுபுகழ் பரவவருந் டருமு
கிலே? விமலமெலாம் விளைந்து மேவுஞ், செஞ்சுடரேசெய்
யிதப்துல் காதிறெனுந் தனித்தெழுந்த ஜெயசிம்மேறே 4.

கையாருந்தேவமுதம் வாய்புகுதா தகன்றகதை நகருத்துட்
பூண்டும், பொய்யானவறிவுடையோம் புகலரியவுமதுவளர்
புதுமையெல்லாம், மெய்யாக வறிந்துமுமை மேவாது
மறந்திருந்த விந்தையாலே, கொய்யோவென்றலறுகிறோ
ம் கல்வத்து காதருட் கூரு வீரே 5.

ஐயறிவு மைம்புலனு மகலவொரு புறநிறுவி யறிவெட்
டாத, மெய்யுணர்வின் மேதகையான் விமலமிகு மாச்சிர
மம் விளைந்து மேவித், தையலொடு தமருறவோர் தமது
டைமை முழுதகற்றித் தனிமைபூண்டீர், பொய்யாத புக
ழுடைய கல்வத்து நாதரெனும் புதுமை யீரே 6.

மாதவத்தைப் பூண்டிடலா மகிமையுற வாழ்ந்திடலாம் வ
னிதையான, மாதர்களைப் பெற்றிடலாம் மருவுஜெய முற்
றிடலா மனதை மேவும், பாதகத்தைப் பறக்கடிக்கும் ப
குதிக்கருமதுமொழி பகரக்கேட்கும், சாதகத்தைப் பெ
றுவதுண்டோ செய்யிதப்துல்காதிறெனுந்தகை சான்றீரே 7.

கண்ணிறைந்த கற்பகமே? ககனுலவுமற்புதமே? கருதாரு
க்கும், தண்ணிறைந்த கருணைமழை யுதவவருந் தயைநிதி
யே தணிவிலாத, வுண்ணிறைந்த திருவுளத்தை யுணரா
து பிதற்றுமெனக்கொருபோதேனும், விண்ணிறைந்த மு
ழு மதியேபோல் விளங்கிடுக கல்வத்தாம் விமலக்கோவே 8.

முற்றிற்று.

25

# பிதாயதுல்கிதாயா,வெனும்நேர்வழியின் ஆரம்பம்.

இது, சற்றேறக்குறைய 800 வருஷங்களுக்கு முன்னிருந்த கஸ்ஸாலி இமாம், அவர்களால் அறபிப்பாஷையிலியற்றப்பட்ட.

## 'பிதாயதுல் கிதாயாவின் மொழிபெயர்ப்பு'

இந்தக்கிதாபு 3 பாகங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. முதலாவது வழிப்பாடுகளைப் பற்றியது. அதில் அல்லாகுத ஆலா அளவிற்சேர விரும்பும் ஒவ்வொருவரும் தமது விலைபெறப்பட்ட வாழ் நாள்களில் ஒரு நிமிஷமேனும் விருதாவிற் பழுதுபடா திருப்பதற்காக இரவுபகல் 24-மணி நேரங்களையும் ஈவித்து இன்னின்ன நேரங்களில் இன்னின்ன நற்காரியங்களை நடத்திவருகவேண்டு மென்றதும், தொழுகை, நோன்பு முதலிய வழிப்பாடுகளுக்குரிய விஷயங்களும், அவைகளுக்குத் துணைக்காரணமான வனேகவிஷையங்களும் அடங்கியிருக்கின்றன. 2-வது பாகம் பாவநிவர்த்தியைப் பற்றியது. அதில் கண், காது, நாவு முதலிய வொவ்வொரு வுறுப்பும் இன்னின்ன வுபயோகத்திற்காகப் படைக்கப்பட்ட தென்பதும், அவைகளை யுபயோகிக்க வேண்டிய வொழுங்குகளும், அவைகளைப் பேணவேண்டிய விதங்களும், வஞ்சகம், பொறாமை, தற்பெருமை, பிறர்தூஷணை முதலிய வனேக விஷையங்களின் விவரங்களும், அவற்றை நிவர்த்தி செய்யத்தக்க பரிகாரங்களும், சந்தர்ப்பத்திற்குத்தகுந்த விதமான வனேக வுபதேச இரத்தினங்களும் அடங்கியிருக்கின்றன. 3-வது பாகம் சினேக வொழுங்குகளைப்பற்றியது. இதில் அடிக்கடி சம்பவிக்கும் அனேக விஷையங்களும் பிறருடைய சகவாசத்தின் பலனாக விளைந்து விடுவதால், இன்னின்ன தன்மையுடைய வரைத்தான் சினேகஞ் செய்துகொள்ள வேண்டுமென்றும், இன்னின்ன குணமுடையவரை சினேகஞ்செய்வதால் தீமையே விளையுமென்றும், சினேகனிடத்திற் கவனிக்கவேண்டிய விஷையங்களும், நடந்துகொள்ள வேண்டிய முறைகளும், அல்லாகுத ஆலாவிடத்தில் அடிமை ...ந்து கொள்ள வேண்டிய முறைகளும், தெளிவாய் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. கிதாபுமுழுவதிலும் 'காயம் அநித்தியம்' என்பதைப் பற்றிய கண்டிப்பான வுபதேசங்களே மலிந்து விளங்குகின்றன. முதனூலுக்குத் தகுந்தாற்போலுள்ள மொழிபெயர்ப்பானது மிகவுந் தெளிவான செந்தமிழ் நடையில் பக்திரசம்பயப்பதாக வமைந்திருக்கிறது. இடைக்கிடையே வரும் அறபி துஆக்களுக்குச்சரியான அர்த்தங்களும், விளக்கக்குறிப்புக்களும் எழுதப்பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| சுத்தத்தமிழ் கிளேஸ் கடிதம் புல்கலிகோ. | 1—0—0 |
| அறபுதமிழ் கிளேஸ் கடிதம் புல்கலிகோ. | 1—10—0 |
| ஷை ஷை தோல்பைண்டு | 2—0—0 |
| அறபுதமிழ் ரப்புக் கடிதம் புல்கலிகோ | —6—0 |

குறிப்பு:— அறபுதமிழில் மௌலிதுல் ஹுகாயிது முதலிய மௌலிதும் பைத்துக்களும், கொழும்பு ஆலிம் சாகிபு அவர்கள்பேரில் மர்திய்யா தர்ஜுமாவுடனும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

செ. மு. ஆலிம்புலவர் 205, அங்கப்பன் தெரு, சென்னை.

# வித்ரிய்யா தர்ஜுமாவும்,

# பத்ஹுல்மஜீதும்

ஒரே கிதாபாக வெளிவந்து விட்டது விலை 6—0—0 இந்த மகிமை வாய்ந்த வித்ரிய்யாவானது, உலகமெங்கும் பிரபல்யமுள்ளது. நமது நாயக முகம்மது ஸல்லல்லாகு அலைகிவஸல்லம வர்கள்மீது அறபிப்பாஷையில் ஸ்தோத்திரமாக வியற்றப்பட்டது. மிகவுமுன்னதமானது. ஒவ்வொரு வீட்டிலும், வியாபாரஸ்தலங்களிலும் வெள்ளி, திங்கட்கிழமைகளில் ஓதிவரப்படுகிறது. இது தர்ஜுமாச் செய்யப்பட்டுத் தனிகிதாபாக அச்சிடப்பட்டு முன்பு ரூ. 5. கிரையம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. ஈமான், இஸ்லா முதலிய எல்லாவிஷயங்களுமடங்கிய பத்ஹுல்மஜீது கிதாபும், முன்பு ரூ. 5. கிரையம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. இவ்விரண்டும் செலவாகிவிட்டமையாலும், இவ்விரண்டும் முஸ்லிமாகிய ஒவ்வொருவருக்கும் இகபரசாதனமாகவிருப்பதாலும் ஒரே கிதாபாக உயர்ந்த கடிதத்தில் அச்சிடப்பட்டுக் கிரையம் ரூ. 10ல் மிகவும் குறைவாக ரூ. 6 ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சொந்த வுபயோகத்திற்குச்சட்டுவதுபோல் நேர்த்தியான தோல் பைண்டுங் கட்டப்பட்டிருக்கிறது.

அஹ்ஸனுல் முனாஜாது,

இது, அலிபுமுதல், ஏ. வரையிலுமுள்ள 29-எழுத்துக்களையும் ஆரம்பமாக வைத்து அல்லாதஆலா விடத்தில் வேண்டி நிற்றல் பொருளில் பாடப்பட்டது. இதில் ஒவ்வொரு பாட்டிலும் ஸெயிதுனாஇமாம் ஹஸன்ஹுஸைன் றலியல்லாது அன்குமா அவர்களுடைய பெயரைவைத்தும், அவ்விருவரைக்கொண்டு அல்லாதஆலாவிடத்தில் சிபாரிசுதேடியும், ஒவ்வொரு பாட்டினுடைய முடிவிலும் அர்ஹமுற்றாகிமீன் என்று முடித்துமிருக்கிறது. இமாம்ஹஸன் ஹுஸைன் றலியல்லாது அன்குமா அவர்கள்பேரிலியற்றப்பட்டவைகளில் இது ஒரு நூதனமாகவும் உயர்ந்தபொருள்கள் ஒருங்கேயமையப்பட்டதாகவும் உள்ளது. அறபுத்தமிழில் அச்சிடப்பட்டிருக்கிறது. விலை அணா 1.

# அறிவிப்பு.

மேற்குறித்தவைகளும், மற்றும், அறபுதமிழ் கிதாபுகள், தமிழ்ப்புத்தகங்கள், குர் ஆன்ஷரீபுகளும் கீழ்க்காட்டப்படும் விலாசத்தாரிடம் ரொக்கமாகவும் வி. பி. மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. செலவு பிரத்தியேகம். மேல்விலாசம் இங்கிலீஷ் அல்லது தமிழில் பிழையற எழுதவேண்டும்.

செ. மு. ஷுலிம்புலவர் அங்கப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

குறிப்பு.—பதானர்தமாலிகை, கீர்த்தனமாலிகை முதலியவைகள் கு. மு. முகம்மது ஹுஸைன், குருணாக்கல், சிலோன். இந்த விலாசத்தாரிடமும் கிடைக்கும்.

S. MURTHY AND CO., MADRAS. THE "KAPALEE" PRESS.